# பகவத் பாதை

**BAGAVATH PATHAI**

• Volume : 1 • Issue : 5 — தமிழ் மாத இதழ் — • July 2014 • Annual Subscription Rs. 100/-

• மலர் : 1 • இதழ் : 5 • ஜுலை 2014 • வருடச் சந்தா ரூ. 100/-


## சுதந்திரப் பிரவாகம்

- ஸ்ரீ பகவத்



"நம் மன உணர்ச்சிகள் தாமாக இயங்குவதற்கு நாம் நமதளவில் எந்த முரண்பாட்டையும் ஏற்படுத்தாதபோது, நாம்தான் நம் உணர்ச்சிகள், நம் உணர்ச்சிகள் தாம் நாம் - என்ற ஒருமை தன்மை மட்டுமே உள்ளது. இதுவே அக சரணாகதி"

- ஸ்ரீ பகவத்



தத்துவ உண்மைகளைப் புரிந்து கொண்டால் மட்டும் போதும்; அதை செயல்படுத்தத் தேவை இல்லை

- என்ற விபரத்தை 'தத்துவமும் செயலும்' என்ற தலைப்பில் நாம் ஒரு கட்டுரையைப் பார்த்தோம்.

தத்துவங்களும் கருத்துகளும் தேவைப்படாத பட்சத்தில்

நாம் எப்படிதான் செயல்படுவது?

நமது செயல்களெல்லாம் அர்த்தமில்லாத செயல்களாகிவிடாதா?

காட்டில் ஒரு யானை தண்ணீருக்காக தாகத்துடன் இங்குமங்கும் அலைந்து கொண்டிருந்தது. ஆற்றுக்குப் போகும் பாதையைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

யானை இப்படி பாதை தெரியாமல் தடுமாறுவதை உயர்ந்த மரமொன்றின் உச்சியிலிருந்த எறும்பொன்று கவனித்துக் கொண்டிருந்தது. அது யானைக்கு உதவ நினைத்தது. உயரமான மரத்திலிருந்ததால் அதன் கண்களுக்கு யானை இருந்ததும் தெரிந்தது, ஆறு இருப்பதும் தெரிந்தது.

அந்த எறும்பு மரத்தின் உச்சியிலிருந்து குதித்து யானையின் முதுகில் உட்கார்ந்து கொண்டது. அது சத்தம் போட்டுக் கத்தியபடி யானைக்கு வழிகாட்டியது.

"உனக்கு வலது பக்கமாகக் செல்லும் பாதையில் நேராக நடந்துபோ!" என்று கூறியது எறும்பு.

யானையும் வலது பக்கமாகச் செல்லும் பாதையில் நேராக நடந்து சென்றது.

சற்று தூரம் சென்றதும் அந்த நேரான பாதையிலிருந்து சிறியதான பாதையொன்று இடது பக்கமாகப் பிரிந்து சென்றது.

இப்போது எறும்பு வழிகாட்டியது.

"இனி நீ நேராகச் செல்லும் பாதையில் செல்லவேண்டாம். இடது பக்கம் பிரிந்து செல்லும் சிறிய பாதை வழியாக இறங்கி நடந்து போ!"

ஆனால் யானை இடது பக்கம் திரும்பாமல் நேராகச் செல்லும் பாதை வழியாகவே தொடர்ந்து போக ஆரம்பித்தது.

எறும்புக்கு கோபம் வந்துவிட்டது.

" என்ன நான் சொல்வதைக் கேட்க மாட்டாயோ? இனி நான் உனக்கு வழிகாட்ட மாட்டேன். நீ எக்கேடும் கெட்டுப்போ!"

யானையோ எதையுமே சட்டை பண்ணாமல் நேராகச் செல்லும் அந்தப் பாதை வழியாகவே தொடர்ந்து நடந்தது. அப்படி தொடர்ந்து நடந்து செல்லும்போது மீண்டும் இன்னுமொரு இடத்தில் இடது பக்கமாக ஒரு சிறிய பாதை பிரிந்து சென்றது.

அதைப் பார்த்துக்கொண்டிருந்த எறும்பு, போனால் போகட்டும் என மீண்டும் உதவிக்கு வந்தது.

"இனியாவது இடது பக்கமாகச் செல்லும் இந்தப் பாதையில் திரும்பி நட, நேராக ஆற்றுக்குப் போய்விடலாம்" - இப்படி எறும்பு வழி காட்டியது.

யானையும் இடது பக்கமாகச் செல்லும் பாதையில் நடந்து சென்று ஆற்றை அடைந்தது. தாகந்தீர தண்ணீரை உறிஞ்சிக் குடித்தது. பிறகு குளிப்பதற்காக ஆற்றுக்குள் இறங்க ஆரம்பித்தது.

அதைப் பார்த்ததும் எறும்புக்கு மீண்டும் கோபம் வந்துவிட்டது.

"என்ன நீ? குடிப்பதற்கு தண்ணீர் இருக்கும் இடத்தைக் காட்டினால், நீ குளிக்கவே ஆரம்பித்து விட்டாய். உன் மீது உட்கார்ந்திருக்கும் நான் என்ன ஆவேன்? உள்ளே இறங்காதே! வெளியே வந்துவிடு!"

- எறும்பு இப்படிச் சத்தம் போட்டது.

ஆனால் யானை அதைக்கண்டு கொள்வதாக இல்லை. அது, அதன்போக்கில் ஆனந்தக் குளியலில் ஈடுபட்டுக் கொண்டிருந்தது.

எறும்பு கோபத்தில் அங்கலாய்த்துக் கொண்டிருந்தது: "இந்தக்காலத்தில் எவருக்குமே நன்றியுணர்ச்சி கிடையாது. இவர்களுக்கெல்லாம் வழிகாட்டுவதே தப்பு. அலைந்து திண்டாடட்டும் என்று அவர்களையெல்லாம் அப்படியே விட்டுவிட வேண்டும்". யானையின் மேலிருந்த எறும்பு தண்ணீரில் அடித்துச் செல்லப்பட்டது.

உண்மையில் எறும்பு இருந்ததோ, அது பேசியதோ, வழிகாட்டியதோ, தண்ணீரில் அடித்துச் செல்லப்பட்டதோ எதுவும் யானைக்குத் தெரியாது.

யானை, தனது பாதையைத் தானே கண்டு பிடித்துக்கொண்டது. ஆனால் எறும்போ, தான்தான் யானைக்கு வழிகாட்டியதாக நினைத்துக் கொண்டது.

இப்படிதான் நமக்குப் பலவிதமான உணர்ச்சிகள் நம் மனதில் தோன்றுகின்றன. பயம் ஏற்படுகிறது; கோபம் ஏற்படுகிறது; மகிழ்ச்சி, வருத்தம் போன்றவை ஏற்படுகின்றன.

அவற்றை நிர்வாகம் செய்யும் பொறுப்பை நம் மனதின் ஒரு பகுதியான அறிவு எடுத்துக்கொள்கிறது.

நமக்கு ஏற்படும் உணர்ச்சிகள் எவ்வாறு அமையவேண்டும், அந்த உணர்ச்சிகளை நாம் எவ்வாறு எதிர்கொள்ளவேண்டும்,

- என நாம் பலவிதமான கருத்துகளையும், தத்துவங்களையும் வகுத்து வைத்துள்ளோம்.

நமது உணர்ச்சிகளுக்கும், தத்துவங்களுக்கும் உள்ள தொடர்பு

யானைக்கும் எறும்புக்கும் உள்ள தொடர்புதான்.

நமது தத்துவங்கள் எவையும் நமது உணர்ச்சிகளை நிர்வாகம் செய்வதில்லை.

**நாம்** நமது அலுவலகத்தில் ஒரு பிரச்சினையை சந்திப்பதாக வைத்துக்கொள்வோம்.

எந்தத் தவறையும் செய்யாத நம்மை, தவறு செய்ததாகக் குற்றஞ்சுமத்தி நம்மை நமது மேலதிகாரி ஒருவர் அவமானப்படுத்தி விடுகிறார்.

இப்போது நமக்கு என்ன விதமான உணர்ச்சிகள் ஏற்படுகின்றன?

அ) நமக்கு அவர்மீது கோபம் ஏற்படுகிறது.

ஆ) நமக்கு வருத்தம் ஏற்படுகிறது.

இ) எந்த உணர்ச்சிகளும் பாதிக்காத நிலையில் நம் மனம் அமைதியாகவே இருக்கிறது.

- இப்படி மூன்று விதமான அம்சங்களில் ஏதோ ஒன்று ஏற்படுகிறது.

இந்த உணர்ச்சிகளில் எந்த உணர்ச்சி ஏற்படுவது சரியானது?

"அ"உணர்ச்சி சரியானதா?

"ஆ"உணர்ச்சி வரலாமா?

"இ"யாக இருக்கும் அமைதி நிலைதான் சரியானதா?

இரண்டாவதாக இன்னுமொரு உதாரணத்தை எடுத்துக்கொள்வோம்.

நாம் மாத்திரம் நமது வீட்டில் தனியாக இருக்கிறோம். திடீரென நம் வீட்டினுள் பைத்தியக்காரன் ஒருவன் உள்ளே நுழைந்துவிடுகிறான்.

அவனைப் பார்த்ததும் நமக்கு என்ன உணர்ச்சிகள் ஏற்படும்?

அவனைப் பார்த்ததும், "இவன் எப்படி உள்ளே நுழையலாம்?" என அவன்மீது நமக்குக் கோபம் ஏற்படலாம்.

அல்லது "இவன் நம்மை ஏதாவது செய்துவிடுவானோ?" என்று அவனைப் பார்த்து நமக்கு பயம் ஏற்படலாம்.

கோபம் ஏற்படும் போது கோபத்தைப் பயன்படுத்தி அவனை சப்தம் போட்டு திட்டி அவனை வீட்டை விட்டு துரத்தி விடுகிறோம்.

அவனைப் பார்த்ததும் நமக்கு பயம் ஏற்பட்டால் நம்மால் அவனை விரட்டித் துரத்த முடியாது. அதே நேரம் அந்தப் பைத்தியத்தை வீட்டுக்குள்ளும் வைத்திருக்க முடியாது. நாம் என்ன செய்வது?

பக்கத்து வீட்டினர்களின் உதவியை நாடுகிறோம். அவர்கள் நம் உதவிக்கு வருகிறார்கள். அனைவருமாகச் சேர்ந்து அந்தப் பைத்தியத்தை வெளியே அனுப்பிவிடுகிறோம்.

அந்தப் பைத்தியத்தை நிர்வாகம் செய்ய, நமக்கு ஏற்பட்ட கோபம் உதவி செய்கிறது.

கோபம் ஏற்படாத பட்சத்தில் பயம் உதவி செய்கிறது. பயம் ஏற்பட்டதால் தான் பக்கத்து வீட்டினர் உதவியை நாடுகிறோம்.

நமக்கு ஏற்பட்ட சூழ்நிலையை எதிர்கொள்ளத்தான்

நம்முடைய உணர்ச்சிகள் நமது உதவிக்கு வருகின்றன.

கோபமும் உதவி செய்கிறது; பயமும் உதவி செய்கிறது.

அந்தப் பைத்தியம் நம் வீட்டுக்குள் நுழையும் போது நமக்கு கோபமும் ஏற்படவில்லை, பயமும் ஏற்படவில்லை என்றால்

நாம் என்ன செய்வோம்?

அந்தப் பைத்தியத்தை நம்மால் நிர்வாகம் செய்ய முடியாமல் போய்விடும்.

நம் வீட்டுக்குள் நுழைந்த அந்தப் பைத்தியம்

நம் வீட்டீன் ஒவ்வொரு தட்டாகச் சென்று கடைசியில் வீட்டின் பின்வாசற் கதவையும் திறந்து கொண்டு

வீட்டை விட்டே வெளியேறி விட்டது என வைத்துக்கொள்வோம்.

இப்போது அந்தப் பைத்தியத்தை நிர்வாகம் செய்ய வேண்டிய அவசியம் எதுவும் நமக்கு இல்லை.

அந்தப் பைத்தியத்தைப் பார்த்ததால் ஏற்பட்ட கோபத்துக்கும் வேலையில்லை; பயத்துக்கும் வேலை இல்லை.

இப்படித் தேவையில்லாமல் வந்த உணர்ச்சிகளை என்ன செய்வது?

அவற்றை சமன் செய்ய வேண்டாமா?

நம்முடைய முதலாவது உதாரணத்தில் நம் மனது, அ, ஆ, இ என மூன்று வித அம்சமாக செயல்பட்டதாகப் பார்த்தோம்.

இவற்றுள் எது சரி?

நாம் செய்யாத தவறுக்கு நம்மீது குற்றம் சுமத்தியவர் நம்முடைய உயர் அதிகாரி. அவரை எதிர்த்து நம்மால் எதுவும் செய்ய முடியாது.

ஆகவே "இ" அம்சமாக, நம்முடைய மன இயக்கத்தை சமநிலையில் வைத்திடுவது தான் சிறந்தது.

- இப்படி நம் அறிவு கூறுகிறது.

ஏனென்றால் அவர் மீது கோபப்படும் தகுதி நமக்குக் கிடையாது. இதனால் "அ" என்னும் கோப உணர்வு தேவையற்றது.

"ஆ" என்னும் வருத்தம் ஏற்படும் பட்சத்தில் அது நம்மைத்தான் பாதிக்கிறது. நம்முடைய வருத்தத்தினால் நம்முடைய மனம் மற்றும் உடல் ஆரோக்கியந்தான் பாதிக்கப்படுகிறது.

ஆகவே "இ" என்னும் மனச்சமநிலைதான் நமது சரியான இயக்கம். ஆகவே அத்தகைய உணர்ச்சி நமக்கு ஏற்படுவதுதான் சரியானது.

"இ" என்னும் சமநிலை உணர்வு வெளிப்பட்டால் அங்கு நமக்கு எந்த வேலையும் இல்லை. ஏனெனில் அதுவே சரியான உணர்வாக உள்ளது.

"அ" அல்லது "ஆ" உணர்வு வெளிப்படும்போது தான் அதை நிர்வாகம் செய்ய தத்துவங்களும், செயல்முறைகளும் தேவைப்படுகின்றன.

அவற்றை அவைபோக்கில் விட்டுவிட்டால் அவை தாமாகச் சீராகிவிடும். அவை ஒரு புனிதப் பிரவாகமாக மாறிவிடும்

- என நாம் கண்டுபிடித்துள்ளோம்.

இது நமது தத்துவம். இந்த தத்துவத்தை நாம் செயல்படுத்தவேண்டாமா?

இந்தத் தத்துவத்தை நாம் செயல்படுத்த முயன்றால் அதுவுமே ஒரு போராட்டமாகிவிடும் எனப் பார்த்தோம்.

இந்நிலையில் நாம் என்ன செய்வது? நாம் கண்டுபிடித்த தத்துவத்துக்குதான் என்ன வேலை?

இந்த தத்துவத்தை பயன்படுத்தத் தேவையில்லையென விட்டுவிடுவதாகவே வைத்துக்கொள்வோம். அந்நிலையில் என்ன நடக்கும்?.

நமக்கு வேண்டாத உணர்வுகள் ஏற்படும் வரை

அவற்றை நிர்வாகம் செய்து அவற்றை அப்புறப்படுத்துவதற்கான ஒரு மனத்தூண்டுதல் இருந்து கொண்டுதான் இருக்கும்.

நம் மனதில் நமக்குப் பிடிக்காத உணர்ச்சிகள் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் வரை

அவற்றை நிர்வாகம் செய்யும் ஏதாவது ஓர் ஏற்பாட்டை நம் மனம் செய்து கொண்டேதான் இருக்கும்.

நாம் நமக்கு வேண்டாத ஒருவரைச் சந்திக்கிறோம் என்றால்

நம் மனதுதான், தனக்கு வேண்டாத ஒருவரைச் சந்திக்கிறது.

நம் மனது எதைச் சந்திக்கிறதோ அதை எதிர்கொள்வது சம்பந்தமான ஒரு Reaction - ஓர் உணர்ச்சி நம் மனதில் ஏற்படுவதுதான் இயற்கை.

நமக்கு வேண்டாதவரை நம் மனது சந்தித்ததும், நம் மனதில் ஒரு வெறுப்புணர்ச்சி ஏற்படுகிறது.

இப்போது நம் மனது இந்த வெறுப்புணர்ச்சியைச் சந்திக்கிறது.

பிடிக்காத நபரை நம் மனது சந்தித்தபோது நம் மனதில் ஏதாவது ஓர் உணர்ச்சி ஏற்பட்டது போல்

நம் மனது இந்த வெறுப்புணர்ச்சியைச் சந்திக்கும் போதும்

நம் மனதில் ஏதாவது ஓர் உணர்ச்சி மீண்டும் ஏற்படத்தான் செய்யும்.

நம் மனது எதைச் சந்திக்கிறதோ அதை நிர்வாகம் செய்வதற்காகத்தான் இத்தகைய உணர்ச்சிகள் ஏற்படுகின்றன.

நாம் எதிர்கொள்ளும் நபரை நிர்வாகம் செய்ய வேண்டிய அவசியம் நமக்கு உள்ளது.

அதற்குத் தூண்டுதலாக ஏற்படும் நம் உணர்ச்சிகளை நிர்வாகம் செய்ய வேண்டிய அவசியம் எதுவும் நமக்கு இல்லை.

**புதர்கள்** நிறைந்த ஒரு பகுதியில் நாம் நடந்து செல்ல வேண்டியுள்ளது. அது இரவு நேரம். பாம்புகள் எவையேனும் பாதையில் கிடக்குமோ என நம் மனம் அச்ச உணர்வை ஏற்படுத்துகிறது.

அச்ச உணர்வின் தூண்டுதல் காரணமாக நாம் டார்ச் ஒன்றை எடுத்துக்கொண்டு கவனமாக நடக்கிறோம்.

அதன் பிறகும் அச்ச உணர்வு தொடர்ந்து இருந்து கொண்டே இருக்கிறது என வைத்துக்கொள்வோம். இப்பொழுது நாம் என்ன செய்வது?

நம்மை வழி நடத்துவதற்காக வந்த அச்ச உணர்வை பயன்படுத்திதான் நாம் செல்லும் பாதையில் கவனத்துடன் நடந்து செல்கிறோம்.

அதன் பிறகு அச்ச உணர்வை பயன்படுத்தி எதையும் செய்யப்போவதில்லை. ஆனாலும் அச்ச உணர்வு தொடர்ந்து இருந்துகொண்டே இருக்கும் பட்சத்தில், நாம் என்ன செய்வது?

அந்நிலையில் நாம் என்ன செய்கிறோம்?

அந்த அச்ச உணர்வு சம்பந்தமாக நமக்கு எந்த வேலையும் இல்லை.

நமது உணர்ச்சிகள் சம்பந்தமாக நமக்கு எந்த வேலையும் இல்லாத போது

- அந்த உணர்ச்சிகளும் நீடித்திருக்கும் போது

நாம் என்ன செய்கிறோம்?

ஏதாவது ஒரு வேலையை நாம் கையில் எடுக்கும் போதுதான் **நமக்கு** முக்கியத்துவம் ஏற்படுகிறது.

எந்த வேலையையும் கையில் எடுக்காத போது

நம் மன உணர்ச்சிகள் தாமாக இயங்குவதற்கு நாம் நமதளவில் எந்த முரண்பாட்டையும் ஏற்படுத்துவதில்லை.

இங்கு நாம் வேறு, நம் உணர்ச்சிகள் வேறு என்ற பிரிவு இல்லை, நம் உணர்ச்சிகளோடு நாம் இணைந்து விடுகிறோம்.

**நாம் தான் நம் உணர்ச்சிகள்; நம் உணர்ச்சிகள்தாம் நாம்**

- என்ற ஒருமைத் தன்மையான இயக்கம் மட்டுமே உள்ளது.

இது நம் முயற்சியால் ஏற்பட்ட நிலையன்று.

மாறாக, இது நம் முயற்சிகள் அனைத்தையும் கைவிட்ட நிலையில்

தாமாக இயங்கும் நம் மன இயக்கமாகும்.

இது ஒரு Submission- இது ஓர் அகச்சரணாகதி.

இங்கு நமது மொத்த மனமும் பிரிவின்றி இயங்குகிறது.

கணந்தோறும் இது, புதுப்பொலிவுடன் இயங்குகிறது.

உங்களை நிர்வகிக்கும் பொறுப்பை விட்டுவிட்ட நீங்கள் இப்போது

எல்லாவற்றையும் எளிதாக எதிர்கொண்டு நிர்வகிக்கும் தீரத்தையும் பெற்றுவிடுகிறீர்கள்.

உங்களுடைய மனம் சுயமுரண்பாடற்று இருப்பதால்

உங்களது ஒவ்வொரு இயக்கமும் திருப்தியின் இயக்கமாகவே உள்ளது.

நீங்களே திருப்தியுடன் இருக்கிறீர்கள்.

நீங்களே பூரணமாக இருக்கிறீர்கள்.

நீங்களே உங்கள் இயல்போடு இருக்கிறீர்கள்.

திருப்தியில் இருந்துகொண்டே உங்கள் பணிகளிலும் ஈடுபடுகிறீர்கள். உங்களை திருப்தி செய்வதற்காக நீங்கள் எந்தப் பணிகளையும் மேற்கொள்வதில்லை.

உங்கள் திருப்தியுணர்வுக்கும், உங்கள் பணிகளுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை.

உங்களுக்கு நீங்களே சுயமுரண்பாடற்றும், பூரணத்துடனும், சுதந்திரத்துடனும் இருக்கிறீர்கள்.

ஆகவே உங்களது செயல்பாடுகள் எவையும் உங்களது சுதந்திரத்தைப் பாதிப்பதில்லை.

நீங்களே ஒரு நிரந்தரப் பிரவாகமாக இருக்கிறீர்கள்.

இந்தப் பிரவாகத்தின் போது ஆனந்த உணர்வுகூட ஓர் அலையாக உங்களுக்கு ஏற்படலாம்.

ஆனால் நீங்கள் எந்த அலையிலும் தங்கியிருக்காத

சுதந்திரப் பிரவாகமாகவே இருக்கிறீர்கள்.

இந்தப் பிரவாக நிலைகூட

நீங்கள் விரும்பித் தேர்ந்தெடுத்துக் கொண்ட நிலையன்று.

உங்களுடைய எந்த அம்சத்தையும் தேர்ந்தெடுக்காத நிலையில்

இந்தப் பிரவாகம்

இயற்கைப் பிரவாகமாகவே உள்ளது.

- சுதந்திரப் பிரவாகமாகவே உள்ளது.



## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.

ஆன்மிகத்தில் மிக உயர்ந்த நிலையாக கருதப்படுவது ஞானம். ஆனால் ஆன்மிகம் மட்டுமல்லாது யதார்த்த வாழ்வுக்கும் மிகவும் இன்றியமையாதது இந்த ஞானத்தெளிவு.

ஆன்மிக வாழ்வாகட்டும் யதார்த்த வாழ்வாகட்டும் யாராக இருந்தாலும் மனதை பயன்படுத்தியே வாழ்க்கையை வாழ்ந்தாக வேண்டும். மனம் இல்லாதவர்கள் என எவரும் கிடையாது. மனத்தை பயன்படுத்தாதவர் எவரும் கிடையாது. நாம் அனைத்தையும் மனதை கொண்டே புரிந்துகொள்கிறோம். பொதுவாக எந்த ஒன்றை பயன்படுத்தினாலும், அதை பற்றிய அறிவை அறிந்து பயன்படுத்த வேண்டும். அப்போதுதான் அதை சரியாக பயன்படுத்த முடியும். அதுபோல்தான் மனதைப் பயன்டுத்தி வாழும் நாம், மனத்தின் இயக்கத்தை புரிந்துகொள்ளவேண்டும். அப்போதுதான் மனதை சரியான விதத்தில் பயன்படுத்தமுடியும். மனதின் இயக்கத்தை முழுவதுமாகப் புரிந்து கொள்வதையே ஞானம் என்கிறோம். மனதைப் புரிந்து கொள்ள விரும்பும் நபராகிய "நான்" என்பதும் மனதின் அம்சமாகவே உள்ளது. எனவே,

மனதின் இயக்கத்தை அறிந்து கொள்வதே தன்னை அறியும் ஞானமாகவும் சொல்லப்படுகிறது.

ஞானம் என்றாலே எளிதில் அடையமுடியாத ஒன்றாகவே இதுவரை சித்தரிக்கப்பட்டு வந்துள்ளது. ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் புரிதல் என்ற புதிய அணுகுமுறையால் மிகவும் எளிமையாக்கப்பட்டுவிட்டது.

எளிமையாக்கப்பட்டதால் ஆன்மிகம் என்ற அடையாளம் கூட தேவையின்றி ஆர்வமுள்ள அனைவருக்கும் பயன்படும் வகையில் அமைந்துள்ளது. இந்தப் புரிதல், புரிந்துகொண்டவர்களை மனப்போராட்டத்திலிருந்து விடுவிப்பதோடு அவர்களை புறத்தில் செயல்வீரராகவும் ஆக்குகிறது. புரிந்தவர்களின் எண்ணிக்கை அதிகரிக்க அதிகரிக்க நமது பூமி கர்ம பூமியாக மாறும் என்பது திண்ணம்.

எனவே இந்த ஞானப்புரிதலை உலகெங்கும் கொண்டு செல்ல நாம் அனைவரும் கைகோர்த்து பயணிப்போமாக .....

அன்புடன்,

**K.S. ஜீவமணி,**
ஆசிரியர்,
செல் : 97891-65555

# கோவையில் இரண்டு நாள் ஞான முகாம்

கோவையில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் நடைபெற உள்ளது. இந்த ஞான முகாம் நமது பகவத் பாதையில் பயணிக்கும் கோவை நண்பர்களின் முயற்சியில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

நடைபெறும் நாள் : 15-8-2014 மதியம் 12-00 மணி முதல் 17-8-2014 மாலை 3-00 மணி வரை

முகாம் நடைபெறும் இடம் :

கோவையில் மிகவும் பிரசித்தி பெற்ற மற்றும் பழமை வாய்ந்த இடமான மேலைச் சிதம்பரம் என்ற திருப்பேரூர் என்னும் சிவாலயத்திற்கும், தமிழ்நாட்டின் "தென் கைலாயம்" என்று அழைக்கப்படுகின்ற சிறப்பு வாய்ந்த ஸ்தலமான வெள்ளியங்கிரி மலைக்கும் இடையில் அமைந்துள்ள "ஸ்ரீ ராமகிருஷ்ண விவேகானந்த ஆஸ்ரமத்தில்" நடைபெற உள்ளது. இந்த ஆஸ்ரமத்தில் பல்வேறு ஆன்மீக, சத்சங்கங்கள் நடந்துள்ளன. இவ்விடம் மிக அமைதியான சூழ்நிலையில் அமைந்துள்ளது.

ஆண்களுக்கு தங்குவதற்கு தனியான கூடமும், பெண்கள் தங்குவதற்கென தனியாக கூடமும் உள்ளன. தனித்தனி அறை கிடையாது. ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் படுக்கை வசதியுடன் வருமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இந்த ஆஸ்ரமம் கோவை மத்திய பேருந்து நிலையம் காந்திபுரத்திலிருந்து 20 கி.மீ தூரத்திலும், ரயில் நிலையத்திலிருந்து 17 கி.மீ தொலைவிலும் அமைந்துள்ளது.

பஸ் வசதி, காந்திபுரத்திலிருந்து புறப்படுகின்ற 14, 14-A, 56, 59, 59-A, 59-B எண் உள்ள பேருந்துகள் ரயில் நிலையத்தின் வழியாகத்தான் செல்லும். எனவே வெளியூர் அன்பர்கள் இதனை பயன்படுத்திக் கொள்ளலாம்.

முகவரி :

ஸ்ரீ ராமகிருஷ்ண விவேகானந்த ஆஸ்ரமம்
சித்திரைச் சாவடி, ஆலாந்துறை கிராமம், பூலுவம்பட்டி (அஞ்சல்), பூண்டி (வழி), கோவை - 641101.

பஸ் நிறுத்தம் : "சித்திரைச் சாவடி"

அனுமதி இலவசம், முன்பதிவு அவசியம்
நன்கொடைகள் வரவேற்கப்படுகிறன.

100 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் முதலில் பதிவு செய்யும் 100 நபர்கள் மட்டுமே தங்கும் வசதியோடு கலந்துகொள்ள இயலும் என்பதை தெரிவித்துக்கொள்கிறோம்.

முன்பதிவுக்கு :

1. www.pravaagam.org என்ற இணையதளத்தில் முன்பதிவு செய்யலாம்.
2. கீழ்கண்ட ஏதேனும் ஒரு தொலைபேசிக்கு "Kovai Gnana Muhaam" என்று Type செய்து பெயர், முகவரி மற்றும் செல் நெம்பரை SMS அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

K.S. ஜீவமணி - 9789165555
V.A.P. சரவணன் - 9994205880
திரு. குணசேகரன் - 8098607701
முன்பதிவுக்கு இறுதிநாள் : 05-8-2014

அனைவரும் வருக! தெளிவு பெறுக!!

# ஐயாவை நேரில் சந்திக்க...

திருச்செந்தூர் :

10-7-2014 முதல் 24-7-2014 வரை & 01-8-2014 முதல் 13-8-2014 வரை

சென்னை :

19-8-2014 முதல் 30-8-2014 வரை

# பாதையில் மலர்ந்த மலர்கள்

நமது பகவத் பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் வணக்கம். என் பெயர் சரவணன், பெங்களூரில் Software Engineer-ஆக பணிபுரிந்து வருகிறேன். ஆன்மிகத்தில் எனக்கு இயற்கையாகவே ஓர் ஈடுபாடு இருந்தது. 2005 ஆம் ஆண்டு ஓர் ஆன்மிக பயிற்சியைக் கற்றுக்கொண்டு அதைச் செய்து வந்தேன். நல்ல அனுபவமும் உணர்வுபூர்வமான மாற்றமும் தந்தது. ஆனாலும் ஏதோ ஒன்று புரியாமலே இருந்தது. இந்நிலையில் J.K.வின் கருத்துகள் புத்தகங்களில் மேற்கோள் காட்டியிருப்பதைப் பார்த்து அவரின் புத்தகங்களைப் படித்தேன். ஆரம்பத்தில் புரியவில்லை என்றாலும் போகப்போக ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தின. இருந்தாலும் எல்லாம் தெளிவான ஓர் உணர்வு இல்லை. அவற்றை கருத்தாக மட்டுமே புரிந்துகொள்ள முடிந்தது. இந்நிலையில் Hr.பாஸ்கர் வகுப்பிற்கு சென்ற என் தோழன் "ஞான விடுதலை", "கவலைகள் அனைத்திற்கும் தீர்வு" என்ற புத்தகங்களை வாங்கி வந்திருந்தான். பலபேர் வாங்கியதால் அவனும் அதை வாங்கியிருக்கிறான். ஆனால் அதைப் படிக்கும் ஆர்வம் அவனிடம் இல்லை. அவைகளை என்னிடம் காட்டினான். அதில் "பகவத் ஐயா - இவரால் ஞானம் அடைந்தவர்கள் பலர்" என்று குறிப்பிட்டு இருந்தது. இதைப் பார்த்தவுடன் ‘யார் இவர்? படித்துதான் பார்ப்போம்‘ என்று தோன்றியது. அந்தப் புத்தகங்கள் என்னை புரட்டிப்போட்டன. என் நண்பன் எனக்காகவே இந்த புத்தகங்களை வாங்கி வந்திருப்பதுபோல் தோன்றியது. உடனே திரு. ஜீவமணி அவர்களுக்கு போன் செய்து மற்ற புத்தகங்களையும் வாங்கிப் படித்தேன். பல கேள்விகளுக்கு விடை கிடைத்தன. பல ஆன்மிக கருத்துகள் தெளிவாகப் புரிந்தன. அனைத்தையும் அறிவுபூர்வமாக புரிந்து உரையாட முடிந்தது. ஆனாலும் அப்போது எனக்குள் தெளிவுபெற்ற நிலை ஏற்படவில்லை.

ஐயாவின் "ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்" என்ற புத்தகத்தைக்கூட படித்திருந்தேன். ஆனாலும் அந்தத் தெளிவு ஏற்பட்டதாக உணரவில்லை. இந்நிலையில் எனது தங்கையுடன் உரையாட நேர்ந்தது. அவள் அப்போது என்னிடம் "ஏன் நல்லவர்களுக்கு கஷ்டம் வருகிறது?" என்ற கேள்வியையும் "நல்லது என்றால் என்ன? கெட்டது என்றால் என்ன?" போன்ற கேள்விகளைக் கேட்கவும், நான் பதில் சொல்லிக்கொண்டிருந்தேன். அப்போது உள்ளே "நல்லது கெட்டது" என்று கிடையாது, அவை வெளியே மட்டுமே. உள்ளே எப்போதும் நாம் சமநிலையிலேயே இருக்கிறோம் என்று பகவத் ஐயாவின் நூல்களில் படித்ததை அவளிடம் விளக்கினேன். (We are always in equilibrium State) பிறகு நாம் ஏன் அதை உணரவில்லை எனக்கேட்டாள். ஏன் என்றால் நாம் ஏதோ ஒன்றாக ஆவதற்கு முயற்சி செய்துகொண்டே இருக்கிறோம். அதனால் நாம் சமநிலையில் இருப்பதை உணர முடியவில்லை என்பதை ஒரு உதாரணத்துடன் விளக்கிச் சொன்னேன்.

"நீர் சமநிலையில் உள்ளது. அதில் கல்லெறிந்தால் அலைகள் தோன்றுகிறது. அதுவும் ஓர் இயங்குகின்ற சமநிலைதான் (Dynamic equilibrium). அதேபோல் மனம் எப்போதும் சமநிலையில்தான் இயங்குகிறது. அதில் வரும் உணர்வுகளையும் சேர்த்துதான். இந்த உதாரணத்தில் கல் என்பது ஒரு தூண்டுதல், அலை என்பது அதில் ஏற்படும் உணர்வு. இது ஏற்பட்டு திரும்பவும் அது சமநிலையை அடைகிறது. equilibrium-க்கு வந்து விடுகிறது. "அந்த அலை வருவதைக்கூட நான் ஒரு சமநிலையாகத்தான் பார்க்கிறேன்" என்பதை என் தங்கையிடம் நான் விளக்கிக் கூறினேன். அப்போது அவள் என்னிடம், "இவை அனைத்தும் உனக்குத் தெரிந்தும் நீ ஏன் சமநிலையில் இல்லை" எனக்கேட்டாள். நான் அதற்கு விளையாட்டாக ஏதோ பதில் சொன்னேன். பிறகு இது சீரியசான கேள்வி என சொன்னபோது, என் பதில் "நான் இவைகளைப் படித்து தெரிந்து வெறும் கருத்தாக மட்டும் வைத்திருக்கிறேன், இவைகளை வெறும் கருத்தாக மட்டும் இல்லாமல் உண்மை என புரிந்திருந்தால் அவை வேறாக இருக்கும்" என்று கூறினேன். அந்த பதில் அவளுக்கு திருப்தியை தந்ததோ இல்லையோ, இந்த உரையாடல் முடிந்தவுடன் என் மனதில் Becoming is the issue என்பது எனக்குள் ஒலிக்க ஆரம்பித்து விட்டது. அதாவது அகநிலையில் ஏதோ ஒன்றாக ஆவதற்காக முயற்சி செய்துகொண்டிருப்பதே எல்லா பிரச்சினையையும் கொண்டு வருகிறது என்பது எனக்கு நன்றாக புரிந்தது. ஐயாவின் "தேடிப்போக வீடு இல்லை" என்ற நூலின் தலைப்புக்கான காரணமும் புரிந்தது.

திடீரென எல்லாம் புரிந்ததுபோல் ஆகிவிட்டது. அப்போது J.K.வின் "Ending of Time" என்ற நான் ஏற்கெனவே படித்த புத்தகத்தை எடுத்து அதில் முதல் Chapter-யை படிக்க வேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டது. பிறகு ஐயாவின் "நான் யார்" படித்தவுடன் எல்லா பிரச்சினைக்கும் ஆணிவேரான "நான்" என்பது எப்படி உருவாகிறது என்பதும் தெளிவாகத் தெரிந்துவிட்டது. மேலும் நமக்கு பிரச்சினையை உருவாக்கும் நான் நிரந்தரமானதல்ல. அவை தற்காலிகமானதே என்பது தெள்ளத்தெளிவாகப் புரிந்துவிட்டது. தெளிவு ஏற்பட்டவுடனும் சில சந்தேகங்கள் இருந்தன. அப்போது நான் மீண்டும் ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள் என்ற புத்தகத்தை படித்தேன். ஒவ்வொரு வரியும் ஏதோ எனக்காகவே எழுதப்பட்டதுபோல் இருந்தது. முதல்முறை படிக்கும்போது அப்படி இல்லை. அதேபோல்தான் கவலைகள் அனைத்திற்கும் தீர்வு என்ற புத்தகத்தை படிக்கும்போதும் உணர்ந்தேன். தெளிவுக்குப் பிறகு படிக்கும்போது எனக்கு எந்த ஒரு Repetation-ம் இருப்பதுபோல் தோன்றவில்லை.

ஆனால் முன்பு படித்தபோது எனக்கு அப்படி இல்லை. ஏதோ சொன்னதையே திரும்ப சொல்லியிருப்பதுபோல் தோன்றியது. இந்தத் தெளிவு ஏற்பட்டவுடன் Confirmation க்காக ஏதேனும் செய்யவேண்டும் என்றுகூட தோன்றவில்லை. எனக்கு விடுதலையுற்ற அனுபவமே அதை உணர்த்தின. அதன் பிறகு எனக்கு ஏற்கெனவே இருந்த எப்போதும் புத்தகம் படித்துக் கொண்டிருக்கும் பழக்கம் கூட என்னை விட்டு போய்விட்டது. என்னால் மரத்தையும் வானத்தையும் ரசிக்க முடிந்தது. அமைதியாய் அன்பாய் எல்லோரிடமும் பழக முடிந்தது.

மேலும் இந்தப் புரிதலை யாருக்காவது தரவேண்டும் என்ற ஆர்வமும் எனக்குள் தீயாய் பற்றி எரிந்து கொண்டிருந்தது. ஆனால் இந்த அனுபவங்கள் யாவும் நாளடைவில் குறைய ஆரம்பித்துவிட்டன. ஆனாலும் தெளிவில் எந்த சந்தேகமும் இல்லை. புரிந்தது புரிந்ததுதான். அதில் எனக்கு எள்ளளவும் சந்தேகம் இல்லை. அதில் "நான் புரிந்துகொண்டேன்" என்பது கூட சொல்வதற்கு எதுவும் இல்லை. புரிதல் என்பதில் எனக்கு எந்த சந்தேகமும் இல்லை என்பதைதான் அப்படி குறிப்பிடுகிறேன். ஐயா அவர்களின் எளிமையான வழிகாட்டுதல் இல்லை என்றால் இது எனக்கு சாத்தியமாகி இருக்காது. ஐயாவிற்கு எனது சிரம் தாழ்ந்த மரியாதையை தெரிவிக்கிறேன். பகவத் பாதையில் அனைவரும் மலர என் வாழ்த்துகள்.

அன்புடன்,
A.சரவணன்,
Software Engineer,
பெங்களுர்.
செல் : 98867-47564.

## பகவத் பாதை சந்தா விபரம்

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

| | | |
|---|---|---|
| ஓர் ஆண்டு சந்தா | - | ரூ. 100/- |
| ஐந்தாண்டு சந்தா | - | ரூ. 500/- |
| ஆயுள் சந்தா | - | ரூ. 1000/- |

சந்தா தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லதக்க D.D. (or) Cheque அனுப்பலாம்.

வங்கி கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank-ல் Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம்.

Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் செல் : 9789165555 என்ற எண்ணில் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

## ஐயாவுடைய நிகழ்ச்சி நிரல்

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 27-7-2014 ஞாயிறு | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர், சென்னை. | **"தன்னை அறியும் ஞானம்"** மாலை 5-30 to 7-30 மணி வரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர். செல் : 9381019473, 944402986, 9884097438, 9444756744 |
| 29-7-2014 செவ்வாய் | வாழ்க வளமுடன் மினி மஹால், 28/11, 4-வது மெயின் ரோடு, வசந்த் & கோ அருகில், 27-வது தெரு, நங்கநல்லூர், சென்னை.600 061. | **நீங்களும் ஞானியாகலாம்** மாலை 6-00 to 8-00 மணி வரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர். செல் : 9381019473, 944402986, 9884097438, 9444756744 |
| 3-8-2014 ஞாயிறு | காந்தி நினைவு அருங்காட்சியகம், மதுரை. | **"தன்னை அறியும் ஞானம்"** மாலை 5-30 to 7-30 மணி வரை | காந்தி நினைவு அருங்காட்சியகம் மற்றும் ஸ்ரீ பகவத் மிஷன், செல் : 9789165555, 8940095175 |
| 15-8-2014 முதல் 17-8-2014 வரை | ஸ்ரீ ராமகிருஷ்ணா விவேகானந்த ஆஸ்ரமம், சித்திரைச் சாவடி, (ஆலாந்துறை வழி) கோவை - 641101. | **ஞான முகாம்** | திரு. குணசேகரன், செல் : 8098607701, 9789165555, 9994205880. |

## ஜென்கதை

## "எங்கே செல்வது?"

புத்தரின் தலைமை மடாலயத்தில் நிகழ்ந்த சுவையான சம்பவம். அடிப்படை சந்நியாஸப் பயிற்சியை வெற்றிகரமாக முடித்த சந்நியாஸிகள், ஞானத்தெளிவை மக்களுக்குக் கொடுத்து மக்கள் முன்னேற்றம் பெறுவதற்காக நாடு முழுவதும் சேவைக்காக புறப்படும் நேரம் வந்தது. அதில் பூர்ணகாஷ்யபா எனும் சந்நியாஸிக்கு மட்டும் எங்கு செல்வது என்று சொல்லப்படவில்லை. பூர்ணகாஷ்யபா நேரடியாக புத்தரிடமே சென்று கேட்டார், "நான் எங்கு செல்லட்டும்?"

புத்தர் சிரித்தப்படி சொன்னார், "நீயே தேர்வு செய்யப்பா", இந்தியாவின் ஒரு குறிப்பிட்ட பகுதிக்கு, தான் செல்ல விரும்புவதாக அந்த சீடர் சொன்னார். சீடனைப் பார்த்து மிகவும் ஆச்சரியப்பட்டவராய் புத்தர் கேட்டார், "அந்தப் பகுதிக்கா? அங்கே வாழும் மனிதர்கள் மிகவும் முரடர்கள். சின்னச் சின்ன பிரச்சினைக்கெல்லாம் அடிதடி சண்டையில் இறங்குபவர்கள், கொஞ்சம் கூட பக்தியோ, ஆர்வமோ இல்லாதவர்கள். இப்படி பொல்லாதவர்களிடமா போக விரும்புகிறாய்?"

"ஆமாம்" என்று தைரியத்தோடு சொன்ன சீடனிடம் புத்தர் சொன்னார், "உன்னிடம் மூன்று கேள்விகளை கேட்க விரும்புகின்றேன். இந்த மூன்று கேள்விக்கும் சரியான பதில் சொல்லிவிட்டால் நீ போகலாம்".

"கேளுங்கள் சாமி"

"முதல் கேள்வி, அங்கே சென்ற பிறகு உன்னை வரவேற்பதற்கு பதில் அவமானப்படுத்தினால் என்ன செய்வாய்?"

"ரொம்ப ஆனந்தப்படுவேன். ஏனென்றால், அவர்கள் என்னை அடிக்கவில்லை; உதைக்கவில்லை. திட்டுவதோடு நிறுத்திக்கொண்டார்களே; மிகவும் நல்லவர்கள் ... என்று நன்றி சொல்வேன்".

"இரண்டாவது கேள்வி. ஒருவேளை திட்டாமல் அடித்து உதைத்தால் என்ன செய்வாய்?"

"அவர்கள் மிகவும் நல்லவர்கள். அதனால்தான் என்னைக் கொல்லாமல் விட்டுவிட்டார்கள். வெறுமனே அடித்ததோடு நிறுத்திக் கொண்டார்களே! என ஆனந்தப்படுவேன்".

"மூன்றாவது கேள்வி. ஒருவேளை உன்னைக் கொன்றுவிட்டால் என்ன செய்வாய்?"

"ஆஹா இன்னும் ஆனந்தப்படுவேன். மொத்தமாக இந்த வாழ்க்கையில் இருந்தே எனக்கு சுதந்திரம் தந்துவிட்டார்கள். இனி எதைப் பற்றியும் கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை என்று மிகவும் ஆனந்தப்படுவேன்" என்று சொன்னதும்,

"நன்றாகத் தேறிவிட்டாய். அங்கு மட்டுமல்ல எங்கு சென்றாலும் நீ வாழ்ந்துவிடுவாய். எதையும் எதிர்கொள்ளும் தீரம் வந்துவிட்டது. எதனாலும் இனி உன்னை வீழ்த்தமுடியாது. எல்லாவற்றையும் ஏற்றுக்கொள்ளும் மனநிலையை பெற்றுவிட்டாய். எங்கு சென்றாலும் நல்லாயிருப்பாயப்பா, போய் வா" என்று ஆசிர்வதித்து அனுப்பினார் புத்தர்.

"அகச் சரணாகதி அடைந்தவர்கள் புறத்தை எதிர்கொள்வது எளிது"





**Book packet** containing printed books
**Periodical**

*If undelivered please return to:*




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555